# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

---

**Wednesday, the 5th March 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at one of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

### *Electric motors*

* 198 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any electric motors are imported from foreign countries and supplied to agriculturists at controlled rates;

(*b*) if so, the varieties of motors imported and their capacity; and

(*c*) how they are distributed in the districts?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement[a] is placed on the table of the House.

SRI N. K. PALANISAMI : எவ்வளவு மோட்டார்கள் இறக்குமதி செய்யப்பட்டன ? அவை எந்த வகையில் கொடுக்கப்பட்டன என்று சர்க்காரிடம் கணக்கு இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது இங்கே வைக்கப்பட்டிருக்கிற காகிதத்திலே இருக்கிறது.

SRI N. K. PALANISAMI : இந்த மோட்டார்கள் விநியோகிக்கப்படும்போது, விவசாயிகளுக்கு அவை நேரடியாகப் போய்ச் சேராமல், அங்கிருக்கும் ரிசர்ச் டிபார்ட்மெண்டார் 'போகஸ்' ஆக பல வியாபாரிகளுக்கு, விவசாயி என்ற பெயரால், மோட்டாரை விற்றிருப்பதாக அரசாங்கத்திற்குத் தகவல் வந்து, அது சம்பந்தமாக ஏதாவது விசாரணை நடந்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி குறிப்பாகக் கேள்வி கேட்டால் அதற்குப் பதில் சொல்வதோடு, அதைப்பற்றி கவனித்து வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம்.

SRI S. LAZAR : எந்த விவசாயிகளிடமிருந்து கையெழுத்து வாங்கி மோட்டார்கள் தருவிக்கப்பட்டனவோ, அதே விவசாயிகளிடம் பின்னால் அவை விநியோகிக்கப்பட்டனவா என்று சர்க்கார் பரிசீலனை செய்ததா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஏதாவது இதைப்பற்றி புகார்கள் இருந்தால், என்னிடம் குறிப்பாகத் தெரிவித்தால், அதைக் கவனித்து வேண்டியதைச் செய்யலாம்.

SRI A. VEDARATHNAM : இந்தியாவிலேயே இந்த மோட்டார்கள் இப்பொழுது செய்யப்படுகின்றன அல்லவா ? அப்படியிருக்க, வெளிநாடுகளிலிருந்து இவைகளைத் தருவிப்பதற்கு அவசியம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மோட்டார்கள் போதிய அளவு இந்த நாட்டிலே கிடைப்பதில்லை. பம்பு செட்டுகள் மட்டும் உற்பத்தியாகின்றன. மோட்டார்கள் போதிய அளவு இல்லாத காரணத்தால் விவசாயிகள் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள்.

---

[a] **Printed as Appendix I on page 303 infra.**

SRI A. R. SUBBIAH MUDALIAR : 1957-ம் ஆண்டு ஜனவரி முதல் ஜூன் முடிய எவ்வளவு மோட்டார்கள் அன்னிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டிருக்கின்றன ? அவை விவசாயிகளுக்கு சரியாக விநியோகிக்கப் பட்டிருக்கின்றனவா ? அதனுல் அதிக ஊழல் ஏற்பட்டிருப்பது சர்க்காருக் குத் தெரியவருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஊழலைப்பற்றி ஏதாவது கவனத்திற்கு வந்தால் அவ்வப்போது அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுகிறது. ஆனுல், இதைவிட பம்புகள் கிடைப்பதில்லை என்ற குறை தான் விவசாயிகளிடமிருந்து அரசாங்கத்திற்கு வந்துகொண்டிருக்கிறது.

SRI S. LAZAR : இந்த மோட்டார்களைத் தனியார்களே விநியோ கிப்பதற்குப் பதிலாக, அரசாங்கமே தருவித்து விநியோகிப்பதற்கு ஏதாவது அரசாங்கத்திடம் திட்டம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறும் அரசாங்கம் செய்துகொண்டுதான் இருக்கிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : மோட்டார் மாத்திரம் இறக்குமதி செய்வதால், இப்பொழுது ஸ்விட்சும், ஸ்டார்ட்டரும் கிடைக்கா மல் விவசாயிகள் மோட்டார் வாங்கியும் தண்ணீர் இறைப்பதற்கு வசதி இல்லாமல் தடுமாறிக்கொண்டிருக்கிருர்கள். ஆகவே, மோட்டார்களும், ஸ்விட்சுகளும், ஸ்டார்ட்டர்களும் அதிகமாக இறக்குமதி செய்ய அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்விட்ச் கியரும் ஸ்டார்ட்ட ரும் இந்த நாட்டில் அதிகமாகக் கிடைப்பதில்லை ; அவைகளையும் இறக்கு மதி செய்வதற்கு அனுமதி வேண்டுமென்றுதான் மத்திய அரசாங்கத் திடம் அவ்வப்போது தெரிவித்துக் கொண்டிருக்கிறேம்.

SRI R. KRISHNASAMI NAIDU : விவசாயிகளுக்கு பம்பு செட்டு கள் வாங்கக் கடன் கொடுக்கும்போது, அவர்கள் விவசாய இலாகாவின ரால் குறிப்பிடப்படும் கம்பெனியிடமிருந்தோ வியாபாரியிடமிருந்தோதான் வாங்கவேண்டுமென்ற கட்டாயம் உண்டா ? அல்லது, விவசாயிகள் தாங் களே நினைத்த இடங்களில் வாங்கிக்கொள்வது அவர்களுக்குச் சௌகரிய மாக இருக்கும் என்ற காரணத்தினுலே, அவர்கள் இஷ்டத்திற்கு விடப் படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எந்த எந்த கம்பெனியிட மிருந்து வாங்க வேண்டுமென்ற ஜாபிதா அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஜாபிதாவிலுள்ளவர்களில் யாரிடம் வாங்கிஞலும் அரசாங்கம் அதை ஒப்புக்கொள்ளுகிருர்கள்.

SRI A. VEDARATHNAM : ஏராளமான தொகையை வெளிநாடு களுக்கு அனுப்பி மோட்டார் தருவிப்பதற்குப் பதிலாக, இந்த நாட்டிலேயே அதை உற்பத்தி செய்யும் தொழில் ஸ்தாபனங்களுக்கு இன்னும் அதிக உதவி கொடுத்து, நம்முடைய தேவையை இங்கேயே பூர்த்தி செய்து கொள்ள அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறதா ? இல்லாவிட்டால், முயற்சி எடுத்துக்கொள்ளுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுபற்றி வேண்டிய முயற்சி எடுத்துக்கொண்டுதான் வருகிறது. இருந்தாலும், அவைகள் விவசாயிகளுக்கு வேண்டிய அளவு கிடைப்பதில்லை. ஆகை யால், ஸ்விட்ச் கியரும், ஸ்டார்ட்டரும் எந்த அளவு கிடைக்கவில்லையோ அந்த அளவு அன்னிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்யவேண்டும் என்பது இந்த அரசாங்கத்தினுடைய கருத்து.

5th March 1958]

SRI N. K. PALANISAMI : 1956-ம் வருஷத்திலேயே மோட்டார் இறக்குமதியை நிறுத்திவிட்டிருக்கிறார்கள். அந்தத் தடையை நீக்கி மறுபடியும் அதிகப்படியாக மோட்டார் இறக்குமதி செய்வதற்கு சர்க்கார் புனராலோசனை செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது முக்கியமாக வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவேண்டிய அவசியம் ஸ்விட்ச் கியருக்கும், ஸ்டார்ட்டருக்கும் இருக்கிறது. மோட்டார்கள் இப்பொழுது கிடைக்கிறது. மோட்டார்கள் போதவில்லையென்றால், அதைப் பற்றியும் அரசாங்கம் கவனம் செலுத்தலாம்.

*Electric motors*

* 199 Q.—SRI S. M. ANNAMALAI : Will the Hon. the Minister for Home be pleased to state whether the Central Government have been requested by the State Government to sanction import and sale of electric motors, starters, switches, etc., for the water pumpsets required by the agriculturists?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : In February 1957 this Government addressed the Government of India for the allotment of 7,400 electric motors (with starters and switches) for the half-year January to June 1957 as a special case to meet the requirements of agriculturists in this State as a result of representations received regarding dearth of electric motors, etc.

SRI S. M. ANNAMALAI : வியாபாரிகள் பழைய மோட்டார்களுக்குப் புது ' பெயின்ட் ' அடித்து புது மோட்டார் என்று சொல்லி விற்பதாலும், காலையில் இருந்த விலை மாலையில் உயர்ந்து விடுவதாலும், அப்படி வியாபாரிகள் தப்பிதமாக விற்பதால் நம்முடைய நாட்டு விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள். ஆகையால், மோட்டார், ஸ்விட்ச், ஸ்டார்ட்டர் போன்ற மின்சார சாமான்களைச் சர்க்காரே வாங்கி கூட்டுறவு சங்கங்கள் மூலமாகவோ, விவசாய டிபார்ட்மெண்ட் மூலமாகவோ விவசாயிகளுக்குக் கொடுக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இம்மாதிரி குறிப்பாக புகார்கள் எதும் அரசாங்கத்திற்கு வரவில்லை. ஆனால் அரசாங்கமே வாங்கி விநியோகிக்கும் விஷயத்திலும் கவனம் செலுத்தப்பட்டுதான் வருகிறது.

*Educational concessions*

* 200 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state why the President of Tamil Nad Congress Committee has been authorized to issue certificates to children of political sufferers regarding the educational concessions?

THE HON. SRI C. SUBRAMANIAM : As per the orders sanctioning the concession to children of political sufferers, political sufferers are defined " as those who have undergone imprisonment in the cause of Indian Independence as a result of taking part in the movements inaugurated since the beginning of the year 1921 by the Indian National Congress or under its sanction ". The President, Tamil Nad Congress Committee, is considered to be the most competent person to issue the certificates.